# ஸ்ரீஜகன்னாத தாசரின் பாண்டுரங்க பாரிஜாத

**(தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)**

தமிழில் உரை எழுதி வெளியிட்டவர் :

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

89044 58276. haridasa.vijayam@gmail.com

jagannathakesava.blogspot.com

dasa-sahitya.blogspot.com

## ஸ்ரீஜகன்னாத தாசரின்
## பாண்டுரங்க பாரிஜாத
## தமிழில் அர்த்த விளக்கங்களுடன்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால், ஸ்ரீபுரந்தரதாஸரின் ஆராதனை நாளான, புஷ்ய அமாவாசை, 21-01-2023 அன்று இந்த புத்தகம் பகவந்தனின் பாதங்களில் சமர்ப்பிக்கப்பட்டது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

தமிழில் உரை எழுதி வெளியிட்டவர்:

ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
பெங்களூரு
Ph: 89044 58276
haridasa.vijayam@gmail.com

இந்தப் புத்தகம் வெளிவருவதற்கு பொருளுதவி புரிந்த அனைத்து ஹரிபக்தர்களுக்கும் நன்றிகள்.

# ஸ்ரீ ஜகன்னாத தாஸரின்
# பாண்டுரங்க பாரிஜாத
# (மூலம் மட்டும் - பாராயணத்திற்காக)

**ராக: பாரஜு. தாள. சாபு**

பாலிஸோ பண்ட3ரி புரிரேயா | பாவன காயா |
பீ4மரதி4 கூல நிலயா ||ப

**ஸ்லோக**
தருண துளஸி மாலா | தப்த கா3ங்கே3ய சேலா |
ஶரதி4 தனயே லோலா | ஶக்வரீ காரி பா2லா ||
ஶிரி அஜ ப4வ மூலா | ஶுத்3த3 காருண்ய லீலா ||
புரஹர ஸுக2 லீலா | பாஹி கோ3பா1ல பா3லா ||1

**பத**
நவ ஜலத4ர நிப4 ஶ்யாமலா ஒப்பி1 கோமலா |
வைஜயந்திய மாலா |
ரவியந்தெ ஹொளெவ கு1ண்ட3ல ஹாரா | த்4ருத கேயூரா |
கௌஸ்துப4 மணி ருசிரா |

தி3வி பூ4 பாதாள லோகதி3 வ்யாப்தா | தோ3ஷ நிர்லிப்தா |
விபஶ்சித ஜனராப்தா |
ப4வ வனதி4கெ3 கு1ம்ப4 ஸம்ப4வா | தே3வர தே3வா |
த4ருமாத்3யர பா4வா ||1

**ஸ்லோக**
அமித ஸுகு3ண தா4மா | ஆத்ம பூ4 பூர்ண காமா |
அமர குல லலாமா | அப்3ஜ தா4மாபி4ராமா ||
யமி குலோத3தி4 ஸோமா | யக்3ஞ ப்3ருத்3யக்3ஞ நாமா |
ஸமர வலய பீ4மா | ஸாத்1வதா1ம் ஸார்வபௌ3மா ||2

**பத**

தி3தி1ஜ மா்த்த3ன தீ3ன ரக்ஷகா | கா்ம ஸாக்ஷிகா |
ஸம்ரக்ஷித1 ஸா்வ லோகா1 |
வித1த1 மஹிம விஶ்வ நாடகா | வக்த்ர கோ4ட1க1 |
ஷோபி4த ரத்ன க1ட1கா1 |

நுதி1ஸுவெ நளின ஜாண்டோ3த3ரா | ஸா்வராதா4ரா |
ஸந்தத நிா்விகாரா |
மதி மந்த3னாகி3 நின்னனு பி3ட்டே1 | மமதெய தொட்டே1 |
காணெனோ புண்ய ப3ட்டெ1 ||2

**ஸ்லோக**

ஜனன மரண தூ3ரா | ஜங்க3மாsசர விஹாரா |
த3னுஜ வன கு1டா2ரா | தீ3ன மந்தா3ர தீ4ரா ||
ப்ரணத1 ப4ய விஹாரா | ப்ராக்ருதாதீத ஸார |
தி3னப1னிப4 ஶரீரா | து3க்க2வாரித3 ஸமீரா ||3

**பத**

வனதி4 ப3ந்த4ன வனௌக1ஸ நாதா2 | ஜிதஸூர யூத2 |
நிா்மல ஶ்ருதி கா3தா2 |
அனுதி3னத3லி நம்பி3தெ3 நின்னா | பாலிஸு என்னா |
ஸந்தத ஸுப்ரஸன்னா ||

மன வாக்காயதி3 மாடி3த3 க்ரியா | நின்னது3 ஜீயா |
கருணதி3 பிடி3 கை1யா |
நெனெயெ நின்னல்லதெ3 அன்யரா | து3ா்ஜன தூ3ரா |
நந்த3கோ3ப குமாரா ||3

**ஸ்லோக**

வனருஹ ப4வ தா1தா1 | வீத தன்மாத்ர பூ4தா |
த்3யுனதி3 ஜலவிதௌ4தா1 | தி3வ்ய பாதா3ம்பு ஜாதா1 ||
அனில த1னய ப்ரீதா1 | அத்1ரி ஸத்3வம்ஷ ஜாதா1 |
அனிமிஷப1ஜ ஸூதா1 | அனதே1ஷ்ட ப்ரதா3தா ||4

**பத**

கரத3ண்ட3 த4ர கடிஸ்தி2த பாணீ | மங்க3ள ஶ்ரேணீ |
லோகைக ஸத்ராணீ |
ஶரணு ஹொக்கர காய்வ பி3ருதா3ங்கா1 | காளிங்க3ன பி3ங்கா1 |
பி3டி3ஸித்3யோ நிஷ்களங்கா |

முர ஶிஶுபால தே4னுக ஹம்ஸா | வத்ஸாஸுர கம்ஸா |
த3ந்தவக்த்ராத்3யர ஹிம்ஸா ||
பரனாகி கொட்டெ தா4ருணிகி3ஷ்டா | ஸுஜனர கஷ்டா |
பி3டி3ஸிதெ3யோ ஓஜிஷ்டா ||4

**ஶ்லோக**

ஶு3ப4தம ஸுக2தீர்த்தா2 | ராத்4ய ஸத்4யான பாத்ரா |
இப4வர ரிபுஹர்தா | விஶ்வ ஜன்மாதி3 கர்தா |
அப4ய தவ பதா3ம்போ4 | ஜாத யுக்3ம ப்ரஸாதா3 |
நப4த3னுபித தே3ஹீ | நிஶ்சலானந்த3 பாஹீ ||5

**பத**

வஸுபதி ஸுத நளகூப3ரா | மணிக்3ரீவரா |
தருஜன்ம விதூ3ரா |
வ்ருஷப4 ஶகட ப3க ப4ஞ்ஜனா | ஜன ரஞ்ஜனா ||
நிர்கு3ண நிரஞ்ஜனா |

வஸுதே3வனிகெ3 மக3னாகி3த்3தே3 | பெ3ண்ணெய கத்3தெ3 |
கோ3பரொட3கூ3டி3 மெத்3தெ3 |
பி3ஸஜஜாண்ட3வ வத3னதொளந்தூ3 | ஸஜ்ஜனர ப3ந்தூ4 |
தோரிதெ3 த3யா ஸிந்து4 ||5

**ஶ்லோக**

நக3த4ர நளினாக்ஷா | நாக1னாதா2தி3 ப1க்ஷா |
ந்ருக3 நரபதி ஶாபா | நிர்ஹணாகார ஸ்ரீபா ||
ப்4ருகு3 முக2 முனி கே3யா | பூ4தனாத2 ஸஹாயா |
அக3ணித ஸுமஹாத்மா | ஸர்வ ஜீவாந்தராத்மா ||6

**பத**

ரஜனீஶ பி3ம்ப3வனுளிஹிதா3 - மாம களுஹிதா3 |
அஹிதரனளுஹிதா3 |
த்3விஜன ஸஹானந்தாஸன புரா | தெ3ய்வெ ஸத்வரா ||
தோரிதெ3 ஸத்புத்ராரா |

பு4ஜக3 மார்க்க3ண ரவி நந்த3னா | பி3டெ3 ஶ்யந்த3னா |
ஒத்தி குந்தீ நந்த3னா |
மஜு2பா4புரெ காய்தெ3 ரணதொ3ளு – பா3ணன தோளு |
க2ண்ட்3ரிஸித்3யோ க்ருபாளு ||6

**ஸ்லோக**

ஶப2ர கமட2 கோலா | ஶத்ருகாஷ்யபி ஸுபா3லா |
குபதி அனில வ்யாளா | நீலகண்டா2ஸ்த்ரா காலா |
த்3ருபத3 தனய சேலா | தூ3ர வர்ஜித து3கூலா |
வபுக்ஷி தி1ஸுர பா3லா | ரக்தபத3 பே4த3 ஶீலா ||7

**பத**

க்ஷேத்ரக்ஞ க்ஷேத்ர நாமக க்ஷீராப்3தி4 நிஜாகா3ரா |
நிர்மல ஓம்காரா |
மாத்ரு ப்ரதிபாத்3ய ஸ்வரூபா | வர்ஜித பாபா |
கு3ருவெனிப ஸாந்தீ4பா |

புத்ரன தந்த3 பராக்ரமா | எல்லர ஸ்வாமி |
பரம ப்ரியஜாமா |
ப4க்த கொ3லிது3 விஶ்வ ரூபவா | தோரி சாபவா |
கொட்டு களத்3யோ தாபவா || 7

**ஸ்லோக**

அதி ஸுவிமல கா3த்ரா | அகி2ள லோகைக பாத்ரா |
வ்ருததிஜ த3ள நேத்ரா | வ்ருத்ரஹாத்3யமர மித்ரா |
ஶ்ருதி கமலஜ ஸூத்ரா | ஸ்துத்ய பாவன பவித்ராs |
ப்ரதிஹத ஸுசரித்ரா | பாது லக்ஷ்மீ களத்ரா ||8

**பத**

ஏளு கோ$^{4}$ளிய கெ$^{3}$த்$^{3}$த$^{3}$ யது$^{3}$பதீ | ஸுபரஞ்யோதி |
நின்னய தி$^{3}$வ்ய க்$^{2}$யாதீ |
ஏளேளு ஜக$^{3}$தொ$^{3}$ளு நுதிஸோரு - நித்ய ஸுகி$^{2}$ஸோரு |
ஆனந்தா$^{3}$ப்தி$^{4}$க$^{3}$தரு |

கேளு மானவ நா ப$^{3}$ல்லெனெ நின்னா நிருதாபன்னா |
ஜன க்லேஶ ப$^{4}$ஞ்ஜனா |
தாளிதெ$^{3}$ நரரொளு நரவேஷா | மஞ்சுள பா$^{4}$ஷா |
என்னய அபி$^{4}$லாஷா ||8

**ஸ்லோக**

ஹனுமனுத பாதா$^{3}$ப்$^{3}$ஜா - ஹம்ஸ ஸம்வக்த்ருகுப்$^{3}$ஜா |
தனுவிக்ருத வினாஶா | காளிஜிஹ்வாஸு தே$^{3}$ஶா ||
த$^{3}$னுஜ ததி கராளா | மத்தபௌண்ட்$^{4}$ராந்த கால |
ஹனும விது$^{3}$ர வந்த்$^{3}$ய | ஹைமக$^{3}$ர்ப்பா$^{4}$ண்ட$^{3}$ வந்த்$^{3}$யா ||9

**பத**

இட்டிகெ$^{3}$ பீட$^{2}$ ஸம்ஸ்தி$^{2}$த பாதா$^{3}$ | மங்க$^{3}$ள ப்ரதா$^{3}$ |
ஶாஶ்வத மோத$^{3}$ ஸுபதா$^{3}$ |
கொட்டு பாலிஸோ அனிமிஷ தரு | நின்னய சாரு |
மூருதியன்ன தோரோ |

புட்டலாரெனு ஜக$^{3}$தொ$^{3}$ளு தா$^{3}$தா | என்னய மாதா |
லாலிஸு ஜக$^{3}$ன்னாதா$^{2}$ |
விட்டல வ்ருந்தா$^{3}$ரகரரஸா | ஸந்தத லேஸா |
நின்னவரிகெ$^{3}$ ஶ்ரீஷா ||9

***

**ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***

# ஶ்ரீ:

# ஶ்ரீஜகன்னாததாஸர் இயற்றிய

# ஶ்ரீபாண்டுரங்க பாரிஜாத

### (தமிழில் அர்த்த விளக்கங்கள்)

**ஜலஜேஷ்ட நிபா3காரம் ஜகதீ3ஷ ப1தாஸ்ரயம்**
**ஜகதீ1த1ல விக்2யாத1ம் ஜகன்னாத கு3ரும்ப4ஜே |**
**தா3ஸவர்யம் த3யாயுக்த1ம் து3ரீக்ருத1 து3ராஷிஷம்**
**ஹரிகதாம்ருத வக்தா1ரம் ஜகன்னாத கு3ரும்ப4ஜே |**

ஶ்ரீஶ்ரீனிவாஸாசார்யர், ஶ்ரீகோபாலதாஸரின் தாஸ தீக்ஷை பெற்றபிறகு, தனக்கு அங்கிதம் வழங்குமாறு கேட்க, அதற்கு கோபாலதாஸர், அவரை பண்டரிபுரத்திற்கு சென்று, பாண்டுரங்கனின் தரிசனம் செய்யுமாறும், அங்கு அவருக்கு அங்கிதம் கிடைக்கும் என்றும் சொல்கிறார். அதன்படியே ஶ்ரீனிவாஸாசார்யர், பண்டரிபுரம் வந்து சந்திரபாகா நதியில் ஸ்னானம் செய்ய, அப்போது 'ஜகன்னாத விட்டலா' என்னும் அங்கிதத்தைத் தாங்கிய ஒரு மரப்பலகை அவரிடம் வருகிறது. அதையே அவர் தனது அங்கிதமாக வைத்துக்கொண்டு, விட்டலய்யா, விட்டலய்யா என்னும் கிருதியை இயற்றி அன்றிலிருந்து ஹரிதாஸர் ஆனார்.

பின்னர், ஹரிகதாம்ருதஸாரம் போன்ற மேரு கிருதியையும், பற்பல தேவர நாமாக்களையும், சுளாதிகளையும் இயற்றினார் ஶ்ரீஜகன்னாததாஸர். அவர் இயற்றிய ஒரு சிறிய கிருதியே இந்த பாண்டுரங்க பாரிஜாத. தனக்கு அங்கிதம் கொடுத்த பாண்டுரங்கனைக் குறித்து, மிகவும் பக்தியுடன், பாண்டுரங்கனின் மகிமைகளை இந்த கிருதியில் வர்ணித்திருக்கிறார்.

**பாலிஸோ பண்ட3ரி புரிரேயா | பாவன காயா |**
**பீ4மரதி4 கூல நிலயா ||ப**

பாலிஸோ - அருள்வாயாக. பண்டரிபுரிரேயா - பண்டரிபுரத்தில் நிலைத்திருக்கும் தலைவனே (ராய என்பதே, பேச்சு வழக்கில் ரேயா என்பதாக வந்திருக்கிறது. ஞானிகளான ஶ்ரீவிஜயதாஸர்,

ஸ்ரீகோபாலதாஸர்களே முதலியவர்கள் இவ்வாறு பயன்படுத்தியிருக்கிறார்கள்). பாவன காயா - பவித்ரமான சரீரம் கொண்டவர்கள். பீமரதி கூல நிலயா - பீமா நதி (சந்திரபாகா) பாயும் இடத்தையே (பண்டரிபுர) வீடாக - தன் இருப்பிடமாக கொண்டிருப்பவனே.

ஸ்ரீஹரி, பண்டரிபுரிரேயா எப்படி ஆனான் என்றால், முன்பு, புண்டலீக என்னும் ஒருவன் வயதான தன் பெற்றோர்களை விட்டுவிட்டு, தன் மனைவியை தோள் மீது தூக்கிக்கொண்டு தீர்த்தயாத்திரைக்கு புறப்பட்டு காசிக்கு வந்து சேர்ந்தான். அங்கு தற்செயலாக, குக்குட முனிவரின் ஆசிரமத்தின் அருகிலேயே தங்க நேர்ந்தது. அங்கு சில நாட்கள் தங்கியதில் அவன் கவனித்தது என்னவெனில், தினமும் காலையில் சில குரூபிகள், துர்நாற்றம் கொண்ட சரீரத்துடன் வந்தனர். அவர்கள் அந்த குக்குட முனிவர்களின் ஆசிரமத்தை அடைந்து, தண்ணீர் தெளித்து, கோலம் போட்டு, சுத்தம் ஆக்கி, முனிவரை வணங்குவதை வழக்கமாக கொண்டிருந்ததைப் பார்த்தான். அப்படி அவரை வணங்கியவுடன், அவர்கள் மிக அழகிகளாக மாறி, திரும்பிச் சென்றனர்.

இதனைப் பார்த்த புண்டலீகன், ஒரு நாள் அவர்களிடம் இவ்வாறு கேட்டான். 'நீங்கள் யார்?. உங்கள் கதை என்ன? இங்கு வந்து நீங்கள் உங்கள் குரூப தேகத்தை இழந்து, அழகியாக மாறும் ரகசியம் என்ன? எனக்கு அதனை சொல்லுங்கள்' என்றான்.

அதற்கு அந்தப் பெண்கள், 'ஹே புண்டலீகனே, நாங்கள் தீர்த்தாபிமானி தேவதைகள். உன்னைப் போன்ற மாதா பித்ரு குரு தெய்வ துரோகிகள் தினந்தோறும் எங்களிடம் வந்து ஸ்னானம் செய்து, தம் பாவங்களை எங்களிடம் சேர்ப்பித்து சென்றுவிடுகின்றனர். அந்த பாவத்தின் பலனால், நாங்கள் குரூபிகளாகவும், துர்நாற்றம் கொண்டவர் களாகவும் ஆகிறோம். ஆனால் நாங்கள் 'தீர்த்தம் குர்வந்தி தீர்த்தானி' என்பது போல, மகா தபஸ்விகளான குக்குட முனிவரின் சேவையை செய்து, நாங்கள் புனிதம் அடைகிறோம். அந்த முனிகளோ, தம் ஜப தப அனுஷ்டானங்களின் சக்தியினால், தம் அனைத்து பாவங்களையும் போக்கிக் கொண்டுள்ளார். பகவத் அனுக்கிரகத்தால் அவருக்கு பாப-லேபம் ஆவதில்லை. புரிந்ததா. நாங்கள் இப்போது புறப்படுகிறோம்' என்று சொல்லி அங்கிருந்து கிளம்பினர்.

இந்த புண்டலீகன், தீர்த்தாபிமானி தேவதைகளின் தரிசனத்தால் புனீதனாகி, குக்குட முனிவர்களின் பாதத்தில் விழுந்து வணங்கி, தன் முந்தைய செயல்களுக்காக மிகவும் வருத்தப்பட்டான். உடனடியாக, காசியிலிருந்து, பண்டரிபுரத்திற்கு புறப்பட்டு வந்து, தன் பெற்றோரின் கால்களில் விழுந்து வணங்கினான். 'மாத்ரு தேவோ பவ; பித்ரு தேவோ பவ' என்று சொல்வதைப் போல, பெற்றோரின் சேவையே பகவத் சேவை என்று சிந்தித்து, அவர்களுடைய இதயத்திலேயே, ஸ்ரீலட்சுமி நாராயணனை சிந்தித்தவாறு, அனைத்து விதங்களிலும் அவர்களுடைய சேவையை செய்தான்.

புண்டலீகனின் இவ்விதமான அனுசந்தானத்தின் பூஜைக்கு மகிழ்ந்த ஸ்ரீஹரி, ஒரு முறை அவனை பரிட்சை செய்வதற்கு அவன் வீட்டிற்கு வந்தான். அப்போது புண்டலீகனின் துடையில் அவனது பெற்றோர் படுத்து தூங்கிக் கொண்டிருந்தனர். ஸ்வாமி வந்ததைக் கண்ட புண்டலீகன், ஸ்வாமி அமர்வதற்கு ஒரு ஆசனம் கொடுக்க வேண்டும் என்று விரும்பினாலும், தான் எழுந்தால் பெற்றோரின் தூக்கம் கெட்டுவிடும் என்று சிந்தித்து, அங்கேயே அருகில் இருந்த ஒரு செங்கல்லை எடுத்து, ஸ்வாமியின் முன் போட்டு 'ஸ்வாமி, நீ சிறிது நேரம் அதன் மேல் நில். என் பெற்றோரின் சேவை முடிந்தவுடன் உன்னிடம் வருகிறேன்' என்றான்.

அதன்படி, ஸ்ரீஹரியும் தன் இரு கைகளையும் தன் இடுப்பின் மேல் வைத்துக்கொண்டு அப்படியே அந்த செங்கல் மேல் நின்றான். பக்தவத்ஸலனான ஸ்ரீஹரி, புண்டலீகனின் பக்திக்கு மெச்சி வந்து அதே செங்கல் மேல் நின்றவாறு, இன்றைக்கும் பக்தர்களுக்கு தரிசனத்தை அளித்தவாறு பண்டரிபுரத்தில் நிலைத்திருக்கிறான்.

**பாவன காயா:**

ஸ்ரீஹரி அப்ராக்ருத தேகம் கொண்டவன். ப்ராக்ருத குணங்களான ஸத்வ, ரஜஸ், தமஸ் குணங்களிலிருந்து தூரன். ஜனன, மரண, ஜராதி தோஷங்கள் அற்றவன். சச்சிதானந்த விக்ரகன். ஜீவ, ஜடங்களிலிருந்து வேறுபட்டவன். லிங்க வர்ஜிதன், ஸ்வகத பேத விவர்ஜிதன், அதற்காகவே, ஸ்ரீஹரியை பாவன காய என்று வர்ணிக்கிறார். இவ்வாறு வேதோக்த சொற்களால் கொண்டாடினால், ஸ்ரீஹரி மகிழ்கிறான்.

**பீமரதி கூல நிலயா:**

பீமரதீச பல்கு ஸரயு... நத்ய: ஸ்ரீஹரி பாத பங்கஜ பவா: - என்று சொல்வதைப் போல, பீமரதிகூல - நதிக்கரையில் இருக்கும் புரத்தையே இருப்பிடமாக கொண்டவன். இத்துடன் பல்லவி முடிந்தது.

**ஸ்லோக**

**தருண துளஸி மாலா | தப்த கா3ங்கே3ய சேலா |**
**ஶரதி4 தனயே லோலா | ஶக்வரீ காரி பா2லா ||**
**ஶிரி அஜ ப4வ மூலா | ஶுத்3த3 காருண்ய லீலா ||**
**புரஹர ஸுக2 லீலா | பாஹி கோ3பா1ல பா3லா ||1**

**அர்த்தம்:**

தருண துளஸி மாலா: துளசிதளங்களால் ஆன மாலையை தரித்தவன். தப்த - சிவந்த; காங்கேய - தங்கமயமான; சேலா - வஸ்திரத்தை தரித்தவன். ஷரதி தனயெ லோலா - சமுத்ரராஜனின் மகளான லட்சுமி தேவியுடன் இருப்பவன்; ஷக்வரீ காரி பாலா - உஷ்ணத்தை உருவாக்கும் கஸ்தூரி திலகத்தை தரித்த நெற்றி உள்ளவன்; ஷிரி - லட்சுமிதேவி. அஜ - பிரம்மதேவர்; மூல - இவர்களின் ஸ்ருஷ்டிக்கு காரணமானவன்; ஷுத்த காருண்யலீலா - சஜ்ஜனர்களை எப்போதும் காப்பாற்றும் செயல்களை செய்து வருபவன்; புரஹர - த்ரிபுராசுரர்களை சம்ஹரித்த ருத்ர தேவருக்கு தன் லீலையால், துக்கத்தை நிவாரணம் செய்து, சுகத்தைக் கொடுத்தவன்; பாஹி - அருள்வாயாக. கோபால பால - கோகுலத்தில் கோபாலகர்களுக்கு (பசுக்களை மேய்ப்பவர்களுக்கு) தலைவனாக இருந்த நந்தனுக்கு புத்ரனாக இருந்தவன்.

ஸ்ரீஜகன்னாததாஸர், ஸ்ரீபாண்டுரங்க விட்டலனின் மூர்த்திக்கு செய்திருக்கும் பல விதமான அலங்காரங்களை பார்த்தவாறு, சாஸ்திர புராணங்களில் வர்ணிக்கப்பட்டுள்ள பகவத் ரூபங்களின் குறிப்புகளுடன் சேர்த்து பார்ப்போம்.

ஸ்ரீபாண்டுரங்க விட்டலனுக்கு, சிறந்ததான துளஸி தளங்களால் கட்டப்பட்ட மாலையை சாற்றி பீதாம்பரத்தை அணிவித்திருக் கின்றனர். அருகிலேயே, ஸமுத்ர குமாரியான லட்சுமிதேவி, ருகுமாயி என்னும் பெயரில் நின்றிருக்கிறார். கஸ்தூரி திலகத்தினால்

ஸ்ரீஹரியின் நெற்றி அலங்கரிக்கப்பட்டுள்ளது. லட்சுமி பிரம்மாதிகளுக்கும் மூல புருஷன் என்று வணங்கப்படும் இவன், லோக காருண்யத்திற்காகவே பற்பல அவதார லீலைகளை செய்து வருகிறான். ருத்ர தேவருக்கு சுகத்தைக் கொடுப்பதற்கு, மோகினி போன்ற ரூபங்களை எடுத்து லீலைகளை செய்திருக்கிறான். இத்தகைய ஸ்ரீஹரி, நந்தகோபனுக்கு பாலகனாக இருக்கிறான். இவனுக்கு பற்பல நமஸ்காரங்கள்.

**பத**

**நவ ஜலத$^{4}$ர நிப$^{4}$ ஶ்யாமலா ஒப்பி$^{1}$ கோமலா |**
**வைஜயந்திய மாலா |**
**ரவியந்தெ ஹொளெவ கு$^{1}$ண்ட$^{3}$ல ஹாரா | த்$^{4}$ருத கேயூரா |**
**கௌஸ்துப$^{4}$ மணி ருசிரா |**

**தி$^{3}$வி பூ$^{4}$ பாதாள லோகதி$^{3}$ வ்யாப்தா | தோ$^{3}$ஷ நிர்லிப்தா |**
**விபஶ்சித ஜனராப்தா |**
**ப$^{4}$வ வனதி$^{4}$கெ$^{3}$ கு$^{1}$ம்ப$^{4}$ ஸம்ப$^{4}$வா | தே$^{3}$வர தே$^{3}$வா |**
**த$^{4}$ருமாத்$^{3}$யர பா$^{4}$வா ||1**

நவ ஜலதர - கரும் மேகங்களைப் போல; நிப - ஒளிரும்; ஷ்யாமலா - கருமை வண்ணம் கொண்டவன்; ஒப்பி கோமலா - கருமை வண்ணத்தால், அழகாக தெரிபவனே; வைஜயந்திய மாலா - பிரம்மதேவரின் ஆணைப்படி விஷ்வகர்மாவால் நிர்மாணம் செய்யப்பட்ட ரத்ன மயமான மாலை அணிந்தவன்; ரவியந்தெ - சூரியனைப் போல; ஹொளெவ - ஒளிரும்படியான; குண்டல - காது ஆபரணம்; ஹாரா - மாலைகள்; கேயூரா - தோள் ஆபரணம்; ருசிரா - சிறந்ததான; கௌஸ்துப மணி; திவி - ஸ்வர்க்க; பூ - பூலோக; பாதாள; வியாப்தா - வியாபித்திருப்பவன்; தோஷ நிர்லிப்த - பரமாத்மனைத் தவிர மற்ற அனைத்துமே ஏதோவொரு வகையில் தோஷங்களைக் கொண்டவையே. அவை அனைத்திலும் அந்தர்யாமியாக இருந்து எப்போதும் தொடர்பிலேயே இருந்தாலும், அந்தந்த தோஷங்கள் ஸ்ரீஹரியை அண்டுவதில்லை; விபஷ்சித ஜனரு - ஸ்ரீஹரியே கதி என்று அவனிடமே மனம் வைத்து, பிற விஷய சிந்தனையை மறந்தவர்கள்; ஆப்த - (அத்தகையவர்களுக்கு) மிகவும் நெருங்கிய நண்பன்; பவ - பாப (ஸம்ஸார); வனதிகெ - கடலுக்கு (சமுத்திரத்திற்கு);

கும்ப ஸம்பவா - அகஸ்த்ய முனிகள்; தேவரதேவா - அனைத்து தேவதைகளுக்கும் தேவனாக, அதனால் பூஜ்யனாக இருப்பவன்; தருமாத்யர பாவா - தர்மராய, பீம, அர்ஜுன, நகுல, ஸஹதேவ என்னும் பாண்டவர்களுக்கு, தன் தங்கையான த்ரௌபதியை (அர்ஜுனனுக்கு சுபத்ரையை) கொடுத்து, திருமணம் செய்தவன் ஆகையால், அவர்களால் ‘பாவ’ என்று அழைத்துக் கொள்பவன்.

ஸ்ரீஹரி, நீலமேக ஷ்யாமலனாக, கோமலாங்கனாக, வைஜயந்தி மாலையை தரித்தவனாக, சூர்யனைப் போல ஒளிர்வதான கர்ண குண்டலங்களை தரித்தவனாக, தோள் ஆபரணங்களை தரித்தவனாக, கௌஸ்துப மாலையை அணிந்தவனாக, ஸ்வர்க, பூமி, பாதாள உலகங்கள் அனைத்திலும் வியாப்தனாக இருக்கிறான். ஆனாலும், ஜீவ, ஜடங்களின் சம்பந்தங்களால் வரக்கூடிய தோஷங்கள் எதுவுமற்றதாக இருக்கிறான். தன்னையே கதி என்று நம்பியிருக்கும் பக்தர்களுக்கு நண்பனாகவும் இருக்கிறான். கஷ்ட துக்கங்கள் நிறைந்த இந்த சம்சார சாகரத்திலிருந்து விடுவிக்கக்கூடிய அகஸ்த்ய முனிவரைப் போல இருக்கிறான். அனைத்து தேவதைகளாலும் பூஜிக்கப்படுகிறான். ஸ்ரீஹரி பாண்டவர்களின் பாவ’ ஆகிறான். இவ்வாறு தாஸர் ஸ்ரீஹரியை கொண்டாடுகிறார்.

**ஸ்லோக**

**அமித ஸுகு$^{3}$ண தா$^{4}$மா | ஆத்ம பூ$^{4}$ பூர்ண காமா |**
**அமர குல லலாமா | அப்$^{3}$ஜ தா$^{4}$மாபி$^{4}$ராமா ||**
**யமி குலோத$^{3}$தி$^{4}$ ஸோமா | யக்$^{3}$ஞ ப்$^{3}$ருத்$^{3}$யக்$^{3}$ஞ நாமா |**
**ஸமர வலய பீ$^{4}$மா | ஸாத்$^{1}$வதா$^{1}$ம் ஸார்வபௌ$^{3}$மா ||2**

அமித= அதிகமாக. ஸுகுணதாம = நற்குணங்களுக்கு இருப்பிடமாக இருக்கும். ஆத்ம பூ = தன் ஆத்மாவையே தன் மகிமைபூர்ணமான செல்வமாக வைத்திருப்பவன். பூர்ண காமா = தான் நித்ய த்ருப்தனாக இருப்பவன். அமர குல லலாம = தேவதைகளின் நடுவில் ஒளிர்பவன். அப்ஜதாம = கமலாலயெ (கமலத்தையே வீடாகக் கொண்டவள் - லட்சுமிதேவி). அபிராம = அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பவன். யமிகுல = யோகிகளின் குழு; உததி = கடல். ஸோம = சந்திர. யக்ஞப்ருத் = அனைத்து யக்ஞங்களில் அந்தர்யாமியாக இருந்து அவற்றை காப்பதற்காக ஆணையிட்டவன். யக்ஞநாம = ஸ்வயம்புவ மனுவின்

மகளான ஆகூதிதேவியில் அவதரித்த ஸ்ரீஹரிக்கு 'யக்ஞ' என்று பெயர். அந்த பெயரால், ஸ்வயம்புவ மனு, ஸ்ரீஹரியை ஈஷாவாஸ்ய உபநிஷத்தில் ஸ்தோத்திரம் செய்து, தன்னை கொல்ல வந்த தைத்யர்களை கொன்றான். ஸமரவலய பீமா = போர்க்களத்தில் (தைத்யர்களுக்கு) பயங்கரமானவன். ஸார்வபௌம = அனைத்து உலகிற்கும் தலைவன். ஸாத்வதாம் = உனக்கு நமஸ்காரங்கள்.

ஸ்ரீஹரியின் பல்வேறு குணங்களைக் கொண்டாடி, அவரை வணங்குவதாக இந்த பத்யத்தில் சொல்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

நற்குணங்களுக்கு இருப்பிடமாக இருக்கும்; தன் ஆத்மாவையே தன் மகிமைபூர்ணமான செல்வமாக வைத்திருப்பவன்; தான் நித்ய த்ருப்தனாக இருப்பவன்; தேவதைகளின் நடுவில் ஒளிர்பவன்; கமலத்தையே வீடாகக் கொண்டவளான லட்சுமிதேவிக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பவன். யோகிகளின் குழு, கடல், சந்திர, மற்றும் அனைத்து யக்ஞங்களில் அந்தர்யாமியாக இருந்து, அவற்றை காப்பதற்காக ஆணையிட்டவன். ஸ்வயம்புவ மனுவின் மகளான ஆகூதிதேவியில் அவதரித்த ஸ்ரீஹரிக்கு 'யக்ஞ' என்று பெயர். அந்த பெயரால், ஸ்வயம்புவ மனு, ஸ்ரீஹரியை ஈஷாவாஸ்ய உபநிஷத்தில் ஸ்தோத்திரம் செய்து, தன்னை கொல்ல வந்த தைத்யர்களை கொன்றான். போர்க்களத்தில் (தைத்யர்களுக்கு) பயங்கரமானவன். அனைத்து உலகிற்கும் தலைவன். உனக்கு நமஸ்காரங்கள்.

**பத**

**தி$^3$தி$^1$ஜ மர்த்த$^3$ன தீ$^3$ன ரக்ஷகா | கர்ம ஸாக்ஷிகா |**
**ஸம்ரக்ஷித$^1$ ஸர்வ லோகா$^1$ |**
**வித$^1$த$^1$ மஹிம விஶ்வ நாடகா | வக்த்ர கோ$^4$ட$^1$க$^1$ |**
**ஷோபி$^4$த ரத்ன க$^1$ட$^1$கா$^1$ |**

**நுதி$^1$ஸுவெ நளின ஜாண்டோ$^3$த$^3$ரா | ஸர்வராதா$^4$ரா |**
**ஸந்தத நிர்விகாரா |**
**மதி மந்த$^3$னாகி$^3$ நின்னனு பி$^3$ட்டே$^1$ | மமதெய தொட்டே$^1$ |**
**காணெனோ புண்ய ப$^3$ட்டெ$^1$ ||2**

திதிஜ - தைத்யர்கள் (திதியின் புத்திரர்கள்). மர்த்தன - கொல்பவன். தீன ரக்ஷக - அவனையே நம்பி இருப்பவர்களை (தன்னில் பக்தி உள்ளவர்கள்) காப்பாற்றுபவன். கர்ம ஸாக்ஷிக - அனைவரும் செய்யும் கர்மங்களையும் பார்த்து பலன்களைக் கொடுப்பவன். ஸம்ரக் ஷித ஸர்வலோக - அனைத்து உலகங்களும் இவனாலேயே அருளப்படுகின்றன. விதத மஹிம = வியாப்தமான மகிமை உள்ளவன். விஷ்வநாடக - உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களின் வியாபாரங்களை செய்பவன். வக்த்ர கோடக - குதிரை முகம் உள்ளவன். (ஹயக்ரீவ). ஷோபித - மேலெழுந்து தெரியும். ரத்ன கடகா - ரத்ன கசிதமான புஜ கிரீட உள்ளவன். நுதிஸுவெ - ஸ்தோத்திரம் செய்கிறேன். நளினஜாண்டோதர - பிரம்மாண்டத்தையே தன் வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பவன். ஸர்வராதார - அனைவருக்கும் ஆதாரமாக இருப்பவன். ஸந்தத - எப்போதும். நிர்விகார - விகாரமில்லாதவன். மதி - புத்தி. மந்தனாகி - இல்லாதவனாக; நின்னய பிட்டெ - உன் விஷயத்தை விட்டு, அன்ய விஷயத்தில் ஈடுபட்டேன். மமதெய தொட்டெ - தற்காலிகமான இந்த பிரபஞ்சத்தின் சுகம் நிரந்தரம் என்று மயக்கத்தை அடைந்தேன். காணெனு புண்யபட்டெ - இவ்வாறு அறிந்துகொண்டு பல காலம் கழித்ததால், மற்ற ஸ்வல்ப ஆயுளில் ஸாதனையை செய்து கொள்ளும் வழியை அறியாதவனாக இருக்கிறேன்.

பகவந்தனின் பல்வேறு குணங்களை சொல்லி, அவனை வணங்காமல் தற்காலிக சுகங்களில் ஈடுபட்டு காலத்தை வீணாக்கினேன் என்று சொல்லி வணங்குகிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

தைத்யர்களை (திதியின் புத்திரர்கள்). கொல்பவன். அவனையே நம்பி இருப்பவர்களை (தன்னில் பக்தி உள்ளவர்களை) காப்பாற்றுபவன். அனைவரும் செய்யும் கர்மங்களையும் பார்த்து, அதற்கேற்ப பலன்களைக் கொடுப்பவன். அனைத்து உலகங்களும் இவனாலேயே அருளப்படுகின்றன. வியாப்தமான மகிமை உள்ளவன். உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களின் வியாபாரங்களை செய்பவன். குதிரை முகம் உள்ளவன். (ஹயக்ரீவ). மேலெழுந்து தெரியும், ரத்ன கசிதமான புஜ கிரீட உள்ளவன். இத்தகையவனை ஸ்தோத்திரம் செய்கிறேன். பிரம்மாண்டத்தையே தன் வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பவன். அனைவருக்கும் ஆதாரமாக இருப்பவன். எப்போதும்

விகாரமில்லாதவன். புத்தி இல்லாதவனாக, உன் விஷயத்தை விட்டு, அன்ய விஷயத்தில் ஈடுபட்டேன். தற்காலிகமான இந்த பிரபஞ்சத்தின் சுகம் நிரந்தரம் என்று மயக்கத்தை அடைந்தேன். இவ்வாறு அறிந்துகொண்டு பல காலம் கழித்ததால், மற்ற ஸ்வல்ப ஆயுளில் ஸாதனையை செய்து கொள்ளும் வழியை அறியாதவனாக இருக்கிறேன்.

**ஸ்லோக**

**ஜனன மரண தூ$^{3}$ரா | ஜங்க$^{3}$மாऽசர விஹாரா |**
**த$^{3}$னுஜ வன கு$^{1}$டா$^{2}$ரா | தீ$^{3}$ன மந்தா$^{3}$ர தீ$^{4}$ரா ||**
**ப்ரணத$^{1}$ ப$^{4}$ய விஹாரா | ப்ராக்ருதாதீத ஸார |**
**தி$^{3}$னப$^{1}$னிப$^{4}$ ஶரீரா | து$^{3}$க்க$^{2}$வாரித$^{3}$ ஸமீரா ||3**

ஜனன மரண தூர - ஸ்ரீஹரிக்கு ஜனன மரணாதி தோஷங்கள் எதுவும் இல்லை; ஜீவர்களுக்கு இத்தகைய ஜனன மரணங்களிலிருந்து விடுவித்து, மோட்சத்தைக் கொடுப்பவன் அவனே. ஜங்கமாசர விஹாரா - சராசர வஸ்துகள் அனைத்திலும் அந்தர்யாமியாக இருப்பவன்; தனுஜ வஜ குடாரா - தைத்யர்கள் என்னும் காட்டிற்கு, கோடலியைப் போன்றவன்; தீன மந்தார - நீயே கதி என்று இருப்பவர்களுக்கு, உன்னை நம்பியவர்களுக்கு கல்பவ்ருட்சத்தைப் போன்றவனே; தீரா - கார்யஸாதகனே / ஞானியே / ஸர்வக்ஞனே; ப்ரணத பய விஹார - பக்தர்களுக்கு வந்த பயங்களை பரிகரிப்பவனே; ப்ராக்ருதாதீத ஸார - ப்ராக்ருத பொருட்களைவிட மீறி நிற்பவன் (அப்ராக்ருதன்); ஸார - ஸ்ரீஹரியே; தினபனிப ஷரீர - சூரியனைப் போன்ற ஒளிபொருந்திய சரீரம் கொண்டவன்; துக்கவாரித ஸமீரா - துக்கங்கள் என்னும் மேகங்களுக்கு, வாயுவைப் போன்றவன் (அதனை விரட்டியடிப்பவன்).

ஸ்ரீஜகன்னாததாஸர், ஸ்ரீஹரியை ஸ்தோத்திரம் செய்தவாறு, அவனை பிறப்பு / இறப்பு இல்லாதவன் என்றும், ஜீவ, ஜடங்களிலும், அந்தர்யாமியாக சஞ்சரிப்பவன் என்றும், தைத்ய சமூகத்தை நாசம் செய்பவன் என்றும், சஜ்ஜனர்களை கல்பவ்ருட்சத்தைப் போல வேண்டிய அனைத்தையும் கொடுத்து காப்பவன் என்றும்; பக்தர்களுக்கு வந்த பயங்களை பரிகர்ப்பவன் என்றும்; ப்ரக்ருதி சம்பந்தமில்லாத ஸ்வரூப யோக்யத்தைக் கொண்டவன் என்றும்,

சூரியனைப் போல ஒளி உள்ள தேகம் கொண்டவன் என்றும், மற்றும் துக்க என்னும் மேகங்களுக்கு வாயு போல இருந்து அவற்றை ஓட்டுபவன் என்றும் ஸ்தோத்திரம் செய்கிறார்.

**பத**
**வனதி4 ப3ந்த4ன வனௌக1ஸ நாதா2 | ஜிதஸுர யூத2 |**
**நிர்மல ஶ்ருதி கா3தா2 |**
**அனுதி3னத3லி நம்பி3தெ3 நின்னா | பாலிஸு என்னா |**
**ஸந்தத ஸுப்ரஸன்னா ||**

**மன வாக்காயதி3 மாடி3த3 க்ரியா | நின்னது3 ஜீயா |**
**கருணதி3 பிடி3 கை1யா |**
**நெனெயெ நின்னல்லதெ3 அன்யரா | து3ர்ஜன தூ3ரா |**
**நந்த3கோ3ப குமாரா ||3**

வனதி பந்தன – கடலில் ஸேது கட்டியவன்; வனௌகஸ நாதா – வனத்தில், கபிகளின் / ரிஷிகளின் தலைவன்; ஜிதஸுர யூத – அசுரர்களின் குழுவினை வென்றவன்; நிர்மல ஷ்ருதி காதா – சிறந்ததான வேதங்களால் போற்றப்படுபவன்; அனுதினதலி நம்பிதெ நின்னா – எப்போதும் உன்னையே நம்பினேன்; பாலிஸு என்னா – என்னைக் காப்பாயாக; ஸந்தத ஸுப்ரஸன்னா – எப்போதும் மகிழ்ச்சியுடனேயே இருப்பவன்; மன வாக்காயதி மாடித க்ரியா – என் மனம், வாக்கு, தேகத்தினால் செய்த அனைத்து செயல்களும்; நின்னது ஜீயா – உன்னுடையதே ஸ்வாமியே; கருணதி பிடிகையா – கருணையுடன் என் கைகளைப் பிடித்து அருள்வாயாக; நெனெயெ நின்னல்லதெ அன்யரா – உன்னைத் தவிர வேறு யாரையும் நான் வணங்குவதில்லை; துர்ஜன தூரா – கெட்டவர்களை அழிப்பவனே; நந்தகோப குமாரா – நந்தகோகுலத்தின் ஸ்ரீகிருஷ்ணனாக வளர்ந்தவனே.

ஸ்ரீபாண்டுரங்க விட்டலனைக் கண்டு ஸ்தோத்திரம் செய்தவாறு, ஸ்ரீஜகன்னாததாஸருக்கு, ஸ்ரீஹரியின் அவதார ரூபங்களில் ஸ்ரீராம அவதாரம் நினைவுக்கு வருகிறது. ஸ்வாமி ஸ்ரீ ராமசந்திரனே, நீ கடலில் ஸேதுவைக் கட்டியவன். தேவாம்ஷ ஸம்பூதரான கபி சைன்யத்திற்கு தலைவன். அனைத்து தைத்யர்களையும் வென்றவன்.

அபௌருஷேயமான வேதங்களால் வணங்கப்பட்டவன். இத்தகைய உன்னை, நான் நம்பி வணங்குகிறேன். என்னை காப்பாற்றுவாயாக. நீ எப்போதும் மகிழ்ச்சியுடனேயே இருக்கிறாய். நான் எப்போது, என் உடல், மனம், வாக்கு ஆகியவற்றால் செய்யும் அனைத்து கர்மங்களும் உன்னாலேயே செய்யப்பட்டு செய்வதால், அவை அனைத்தும் உன் சேவையே என்ற அனுசந்தானத்துடன், உனக்கே சமர்ப்பிக்கிறேன். நீ என் மேல் கருணை காட்டி, என்னை கை பிடித்து, இந்த பவ ஸாகரத்திலிருந்து காப்பாற்றிவிடு. மோட்சத்தை அருள்வாயாக. உன்னைத் தவிர நான் வேறு யாரையும் இப்படி ஸ்தோத்திரம் செய்வதில்லை. துர்ஜனர்களுக்கு எந்த காலத்திற்கும் சிக்காமல் அவர்களிடமிருந்து தூரமாகவே இருப்பவனான, நந்தகோப குமாரனான ஸ்ரீகிருஷ்ணனே, என்னை காப்பாற்றுவாயாக. எனக்கு அருள்வாயாக என்று ஸ்ரீஹரி துதிக்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

பாண்டுரங்கனை ராமனாக நினைத்து இந்த பத்யத்தை துவக்கியவர், இதனை முடிக்கையில், ஸ்ரீகிருஷ்ணனாக முடிக்கிறார். இதிலிருந்து பகவந்தனின் ரூப ரூபத்திற்கு அபேதத்தை சிந்திக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார் என்று எண்ண வேண்டும்.

**ஸ்லோக**

**வனருஹ ப$^{4}$வ தா$^{1}$தா$^{1}$ | வீத தன்மாத்ர பூ$^{4}$தா |**
**த்$^{3}$யுனதி$^{3}$ ஜலவிதௌ$^{4}$தா$^{1}$ | தி$^{3}$வ்ய பாதா$^{3}$ம்பு ஜாதா$^{1}$ ||**
**அனில த$^{1}$னய ப்ரீதா$^{1}$ | அத்$^{1}$ரி ஸத்$^{3}$வம்ஷ ஜாதா$^{1}$ |**
**அனிமிஷப$^{1}$ஜ ஸூதா$^{1}$ | அனதே$^{1}$ஷ்ட ப்ரதா$^{3}$தா ||4**

வனருஹபவ தாதா - தாமரையிலிருந்து பிறந்த பிரம்மனின் தந்தையே; வீத தன்மாத்ர பூதா - பஞ்ச பூதங்கள் (ப்ருத்வி, அபு, தேஜஸ், வாயு, ஆகாஷ), பஞ்ச தன்மாத்ரங்கள் (கந்த, ரஸ, ரூப, கந்த, ஸ்பர்ஷ) இல்லாததான அப்ராக்ருத தேகத்தைக் கொண்டவனே; த்யு நதி ஜலவிதௌதா - கங்கா நதியின் தண்ணீரால் கழுவப்பட்ட; திவ்ய பாதாம்பு ஜாதா - திவ்யமான பாதங்களைக் கொண்டவனே; அனில தனய ப்ரீதா - முக்யபிராணரின் அவதாரங்களான, ஹனும, பீம, மத்வர்களுக்குப் ப்ரியமானவனே; அத்ரி ஸத்வம்ஷ ஜாதா - அத்ரியின் மகன் சந்திரன், அந்த சந்திர வம்சத்தில் அவதரித்தவனே. (அல்லது அத்ரி மஹரிஷியிடம் பிறந்த தத்தாத்ரேயனே); அனிமிஷபஜ ஸூத -

இந்திரனின் மகனான அர்ஜுனனின் சாரதியே; அனதேஷ்ட ப்ரதாதா - பக்தர்களின் விருப்பங்களை உடனடியாக நிறைவேற்றுபவனே.

ஸ்ரீஹரியின் பல்வேறு குணங்களை சொல்லி புகழ்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

தாமரையிலிருந்து பிறந்த பிரம்மனின் தந்தையே; பஞ்ச பூதங்கள் (ப்ருத்வி, அபு, தேஜஸ், வாயு, ஆகாஷ), பஞ்ச தன்மாத்ரங்கள் (கந்த, ரஸ, ரூப, கந்த, ஸ்பர்ஷ) இல்லாததான அப்ராக்ருத தேகத்தைக் கொண்டவனே; கங்கா நதியின் தண்ணீரால் கழுவப்பட்ட; திவ்யமான பாதங்களைக் கொண்டவனே; முக்யபிராணரின் அவதாரங்களான, ஹனும, பீம, மத்வர்களுக்குப் ப்ரியமானவனே; அத்ரியின் மகன் சந்திரன், அந்த சந்திர வம்சத்தில் அவதரித்தவனே. (அல்லது அத்ரி மஹரிஷியிடம் பிறந்த தத்தாத்ரேயனே); இந்திரனின் மகனான அர்ஜுனனின் சாரதியே; பக்தர்களின் விருப்பங்களை உடனடியாக நிறைவேற்றுபவனே.

**பத**
**கரத$^{3}$ண்ட$^{3}$ த$^{4}$ர கடிஸ்தி$^{2}$த பாணீ| மங்க$^{3}$ள ஸ்ரேணீ|**
**லோகைக ஸத்ராணீ|**
**ஶரணு ஹொரக்கர காய்வ பி$^{3}$ருதா$^{3}$ங்கா$^{1}$ | காளிங்க$^{3}$ன பி$^{3}$ங்கா$^{1}$ |**
**பி$^{3}$டி$^{3}$ஸித்$^{3}$யோ நிஷ்களங்கா |**

**முர ஶிஶுபால தே$^{4}$னுக ஹம்ஸா | வத்ஸா஽ஸுர கம்ஸா |**
**த$^{3}$ந்தவக்த்ராத்$^{3}$யர ஹிம்ஸா ||**
**பரனாகி கொட்டெ தா$^{4}$ருணிகி$^{3}$ஷ்டா | ஸுஜனர கஷ்டா |**
**பி$^{3}$டி$^{3}$ஸிதெ$^{3}$யோ ஓஜிஷ்டா ||4**

கரதண்டதர - கையில் கோலினை பிடித்தவன்; கடிஸ்தித பாணி - கைகளை இடுப்பில் வைத்திருக்கிறான்; மங்கள ஸ்ரேணி - எப்போதும் பற்பல (அனைத்து) மங்களங்களையும் கொடுப்பவனே; லோகைக ஸத்ராணி - அனைத்து உலகங்களிலும் சக்தியைக் கொண்ட ஒரேயொருவன் (ஸர்வோத்தமன்); ஷரணு ஹொரக்கர காய்வ பிருதாங்கா - சரணடைந்தவர்களை காப்பவன் என்னும் விருதினைக் கொண்டவன்; காளிங்கன பிங்கா பிடிஸித்யோ - காளிங்கனின் தலை

மேல் நின்று ஆடியவாறு அவனுடைய கர்வத்தை அழித்தவனே; நிஷ்களங்கா - களங்கம் அற்றவனே; முர ஷிஶுபால தேனுக ஹம்ஸா மத்ஸாஸுர கம்ஸா தந்தவக்ராத்யர - இத்தகைய அசுரர்களை; ஹிம்ஸாபரனாகி - கொன்றவனாக இருந்து; தாருணிகிஷ்டா கொட்டெ - பூதேவியின் பாரத்தை (அவளுடைய விருப்பப்படியே) குறைத்தவனே; ஸுஜனர கஷ்டா பிடிஸிதெயோ - ஸஜ்ஜனர்களின் கஷ்டங்களை விலக்கினாய்; ஓஜிஷ்டா - ஞானிகளின் ப்ரியமானவனே. (ஓஜ - ஜீவோத்தம);

ஸ்ரீபாண்டுரங்கன், தன் ஒரு கையில் கோல் பிடித்து, இன்னொரு கையில் சங்கு பிடித்து, தன் வேறு இரு கைகளை இடுப்பில் வைத்து நின்றிருக்கிறான். தான் ஜகதேக வீரனாக, பக்தர்களை காத்து வருகிறான். அனைத்து தைத்யர்களுக்கும் எதிரியாக இருக்கிறான்.

கையில் கோலினை பிடித்தவனே; கைகளை இடுப்பில் வைத்திருப்பவனே; எப்போதும் பற்பல (அனைத்து) மங்களங்களையும் கொடுப்பவனே; அனைத்து உலகங்களிலும் சக்தியைக் கொண்ட ஒரேயொருவன் (ஸர்வோத்தமன்) நீயே; சரணடைந்தவர்களை காப்பவன் என்னும் விருதினைக் கொண்டவனே; காளிங்கனின் தலை மேல் நின்று ஆடியவாறு அவனுடைய கர்வத்தை அழித்தவனே; களங்கம் அற்றவனே; முர ஷிஶுபால தேனுக ஹம்ஸா மத்ஸாஸுர கம்ஸா தந்தவக்ராத்யர - இத்தகைய அசுரர்களை கொன்றவனாக இருந்து; பூதேவியின் பாரத்தை (அவளுடைய விருப்பப்படியே) குறைத்தவனே; ஸஜ்ஜனர்களின் கஷ்டங்களை விலக்கியவனே; ஞானிகளின் ப்ரியமானவனே. (ஓஜ - ஜீவோத்தம);

**ஸ்லோக**

**ஶு3ப4தம ஸுக2தீர்த்தா2 | ராத்4ய ஸத்4யான பாத்ரா |**
**இப4வர ரிபுஹர்தா | விஶ்வ ஜன்மாதி3 கர்தா |**
**அப4ய தவ பதா3ம்போ4 | ஜாத யுக்3ம ப்ரஸாதா3 |**
**நப4த3னுபித தே3ஹீ | நிஶ்சலானந்த3 பாஹீ ||5**

ஶுபதம - குணபூர்ண / தோஷங்கள் அற்றவன்; ஸுகதீர்த்த ஆராத்ய - ஸ்ரீமன் மத்வாசார்யரால் பூஜிக்கப்படுபவனான; ஸத்யான பாத்ரா - அனைவராலும் தியானத்திற்கு ஏற்றவனான; இபவர ரிபுஹர்தா -

யானையின் எதிரியான முதலையை கொன்றவன்; விஷ்வ ஜன்மாதி கர்தா - உலகத்தின் / உலகத்தில் இருக்கும் அனைவரின் பிறப்பிற்கும் காரணமானவன்; அபய தவ பதாம்புஜாத யுக்ம - உன்னுடைய தாமரை போன்ற இரு பாதங்கள்; பிரஸாதா - (அந்த பாதங்களின்) பிரஸாதத்தினை; நபதனுபித - ஆகாஷத்திற்கு அபிமானியான சாருதேஷ்ணனின் தந்தையான ஸ்ரீகிருஷ்ணனே; தேஹி நிஸ்சலானந்த - பரிபூர்ணமான ஆனந்தத்தை (முக்தி) கொடு; பாஹி - அருள்வாயாக.

குணபூர்ணனே, தோஷங்கள் அற்றவனே. ஸ்ரீமன் மத்வாசார்யரால் பூஜிக்கப்படுபவனே. அனைவராலும் தியானத்திற்கு ஏற்றவனே. யானையின் எதிரியான முதலையைக் கொன்றவனே. உலகத்திற்கும், உலகத்தில் இருக்கும் அனைவரின் பிறப்பிற்கும் காரணமானவனே. உன்னுடைய தாமரை போன்றதான இரு பாதங்களின் பிரஸாதத்தினை, ஹே ஆகாஷத்திற்கு அபிமானியான சாருதேஷ்ணனின் தந்தையான ஸ்ரீகிருஷ்ணனே, எனக்கு அருள்வாயாக. பரிபூர்ணமான ஆனந்தத்தை (முக்தியை) எனக்கு அருள்வாயாக.

ஆகாஷத்திற்கு அபிமானியான விக்னேஸ்வரனின் இன்னொரு அவதாரமே சாருதேஷ்ண என்று ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாத தாஸர் சொல்லியிருப்பதை பார்க்கிறோம்.

சாருதேஷ்ணாஹ்வயனெனிஸி அவ
தார மாடிதெ ருக்மிணீயலி
(விக்னேஸ்வர ஸ்தோத்திர ஸந்தி)

**பத**

**வஸுபதி ஸுத நளகூப3ரா | மணிக்3ரீவரா |**
**தருஜன்ம விதூ3ரா |**
**வ்ருஷப4 ஶகட ப3க ப4ஞ்ஜனா | ஜன ரஞ்ஜனா ||**
**நிர்கு3ண நிரஞ்ஜனா |**

**வஸுதே3வனிகெ3 மக3னாகி3த்3தே3 | பெ3ண்ணெய கத்3தெ3 |**
**கோ3பரொட3கூ3டி3 மெத்3தெ3 |**
**பி3ஸஜஜாண்ட3வ வத3னதொளந்தூ3 | ஸஜ்ஜனர ப3ந்தூ4 |**

**தோரிதெ3 த3யா ஸிந்து4 ||5**

வஸுபதி ஸுத - அரசனின் மக்களான (குபேரனின்); நளகூபரா மணிக்ரீவரா - இரு கந்தர்வர்களின்; தருஜன்மவிதூரா - மரமாக பிறந்த அவர்களின் பிறப்பினை அழித்தாய்; வ்ருஷப ஷகட பக பஞ்சனா - வ்ருஷபாஸுரன், ஷகடாஸுரன், பகாஸுரன் ஆகியோரை கொன்றாய்; ஜன ரஞ்சனா - மக்களை மகிழ்ச்சிப்படுத்தினாய்; நிர்குண - ப்ரக்ருதி குணங்களான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் இல்லாதவன்; நிரஞ்சனா - தோஷம் அற்றவன்; வஸுதேவனிகெ மகனாகித்தெ - வஸுதேவனின் மகனாக இருந்தாய்; பெண்ணெய கத்தெ - வெண்ணையை தின்றாய்; கோபரொடகூட மெத்தெ - கோபிகா ஸ்த்ரியர்களுடன் கூடி விளையாடினாய்; ஸஜ்ஜனர பந்து - ஸஜ்ஜனர்களின் உறவினனே; பிஸஜஜாண்டவ வதனதொளந்து - இந்த பிரம்மாண்டத்தை உன் வாயில்; தோரிதெ - காட்டினாய்; தயா ஸிந்து - யசோதைக்கு வாயில் பிரம்மாண்டத்தைக் காட்டிய கருணைக்கடலே.

குபேரனின் மக்களான நளகூபர், மணிக்ரீவர் என்னும் இரு கந்தர்வர்களின் (மரமாக வளர்ந்திருந்தனர்) பிறப்பினை அழித்தாய். வ்ருஷபாஸுர, ஷகடாஸுர, பகாஸுர ஆகியோரை கொன்றாய். இதனால் மக்களை மகிழ்ச்சிப்படுத்தினாய். ப்ரக்ருதி குணங்களான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் இல்லாதவனே. தோஷங்கள் அற்றவனே. வஸுதேவனின் மகனாக பிறந்து, வெண்ணையை தின்றவனே. கோபிகா ஸ்தீரியர்களுடன் விளையாடினவனே. ஸஜ்ஜனர்களின் உறவினனே. யசோதைக்கு இந்த பிரம்மாண்டத்தை உன் வாயில் காட்டிய கருணைக்கடலே.

**ஸ்லோக**

**நக3த4ர நளினாக்ஷா | நாக1னாதா2தி3 ப1க்ஷா |**
**ந்ருக3 நரபதி ஶாபா | நிர்ஹணாகார ஶ்ரீபா ||**
**ப்4ருகு3 முக2 முனி கே3யா | பூ4தனாத2 ஸஹாயா |**
**அக3ணித ஸுமஹாத்மா | ஸர்வ ஜீவாந்தராத்மா ||6**

நகதர - மலையை தாங்கியவன்; நளினாக்ஷ - தாமரைக் கண்ணன்; நாகனாதாதி பக்ஷ - ஸ்வர்க்கத்திற்கு தலைவனான இந்திரனே முதலான தேவதைகளின் பட்சத்தை தலைமையேற்று தாங்கியவன்;

ந்ருக நரபதி ஷாபா நிர்ஹணாகார - ந்ருக மகாராஜனின் சாபத்தை பரிகரித்தாய்; ஶ்ரீபா - லட்சுமிபதியான பாண்டுரங்கன்; ப்ருகு முக முனி கேயா - ப்ருகு ரிஷிகளே முதலானவர்களால் வணங்கப்படுபவன்; பூதநாத ஸஹாய - ருத்ர தேவருக்கு உதவியை செய்தவன்; அகணித - எண்ணிக்கையற்ற மகிமைகள் கொண்டவன்; ஸுமஹாத்மா - உத்தம சரித்திரத்தைக் கொண்டவன்; ஸர்வ ஜீவாந்தராத்ம - ஜீவர்களில் அந்தர்யாமியாக இருப்பவன்.

ஶ்ரீஹரியின் மகிமைகளை தொடர்ந்து இங்கு வர்ணிக்கிறார் ஶ்ரீஜகன்னாத தாஸர்.

கோவர்த்தன மலையை தூக்கியவனே (அல்லது பாற்கடலைக் கடையும் சமயத்தில் மேரு பர்வதத்தை தூக்கியவனே); தாமரைக் கண்ணனே; அசுரர்களுடன் போர் புரியும் சமயங்களில், ஸ்வர்க்கத்திற்கு தலைவனான இந்திரன் முதலான தேவதைகளின் பட்சத்தில் தலைமையேற்று நடந்தவனே; ந்ருக மகாராஜாவின் சாபத்தை பரிகரித்தவனே; லட்சுமிபதியான பாண்டுரங்கனே; ப்ருகு ரிஷிகளே முதலான அனைவராலும் வணங்கப்படுபவனே; ருத்ர தேவருக்கு உதவிகளை செய்தவனே; எண்ணிக்கையற்ற அபாரமான மகிமைகளைக் கொண்டவனே; உத்தம சரித்திரங்களைக் கொண்டவனே; ஜீவர்களில் அந்தர்யாமியாக இருப்பவனே.

**பத**
**ரஜனீஶ பி3ம்ப3வனுளிஹிதா3 - மாம களுஹிதா3 |**
**அஹிதரனளுஹிதா3 |**
**த்3விஜன ஸஹானந்தாஸன புரா | தெ3ய்வெ ஸத்வரா ||**
**தோரிதெ3 ஸத்புத்ராரா |**

**பு4ஜக3 மார்க்க3ண ரவி நந்த3னா | பி3டெ3 ஶ்யந்த3னா |**
**ஒத்தி குந்தீ நந்த3னா |**
**மஜு2பா4புரெ காய்தெ3 ரணதொ3ளு – பா3ணன தோளு |**
**க2ண்ட்3ரிஸித்3யோ க்ருபாளு ||6**

ரஜனீஷ பிம்பவனுளிஹிதா - சந்திர மண்டலத்தின் ஒளியை மீறியவனே; மாக களுஹிதா - கம்சனால் அழைக்கப்பட்ட;

அஹிதரனளுஹிதா - எதிரிகளான தைத்யர்களை அழித்தவனே; த்விஜன ஸஹ அனந்தாஸன புரா - பிராமணனுடன் சீக்கிரமாக அனந்தாஸனத்தை சேர்ந்தாய்; தெய்வெ ஸத்வரா தோரிதெ ஸத்புத்ரரரா - அங்கு அவருடைய மகனை கண்டுபிடித்துக் கொடுத்தாய்; ரவி நந்தனா - சூரிய புத்திரனான கர்ணன்; புஜக மார்க்கண - ஸர்ப்ப அஸ்திரத்தை; பிடெ - விடும்போது; ஷ்யந்தனா ஒத்தி - ரதத்தினை மிதித்து கீழே இறக்கி; குந்தீ நந்தனா - குந்தி புத்திரனான அர்ஜுனனை; மஜுபாபுரெ - மிகவும் வியக்கத்தக்க விதத்தில்; காய்தெ ரணதொளு - போர்க்களத்தில் காத்தாய்; பாணன தோளு கண்ட்ரிஸித்யோ - பாணாஸுரனின் தோள்களை கத்தரித்தாயே; க்ருபாளு - கருணைக்கடலே.

ஸ்ரீகிருஷ்ண அவதாரத்தில் நடந்த சில சம்பவங்களை இங்கு குறிப்பிட்டு, பகவந்தனை போற்றுகிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

சந்திர மண்டலத்தின் ஒளியை மீறியவனே; கம்ஸனால் அழைக்கப்பட்டு, எதிரிகளான தைத்யர்களை அழித்தவனே. பிராமணனுடன் விரைவாக அனந்தாஸனத்தை அடைந்து, அங்கு அவருடைய மகனை கண்டுபிடித்துக் கொடுத்தவனே; சூரிய புத்திரனான கர்ணன், சர்ப்ப அஸ்திரத்தை விடும்போது, அர்ஜுனனின் ரதத்தினை மிதித்து கீழே இறக்கி, அவனை காத்தவனே; பாணாஸுரனின் தோள்களை கத்தரித்தவனே; கருணைக்கடலே.

**ஸ்லோக**

**ஶப$^{2}$ர கமட$^{2}$ கோலா | ஶத்ருகாஷ்யபி ஸுபா$^{3}$லா |**
**குபதி அனில வ்யாளா | நீலகண்டா$^{2}$ஸ்த்ரா காலா |**
**த்$^{3}$ருபத$^{3}$ தனய சேலா | தூ$^{3}$ர வர்ஜித து$^{3}$கூலா |**
**வபுக்ஷி தி$^{1}$ஸூர பா$^{3}$லா | ரக்தபத$^{3}$ பே$^{4}$த$^{3}$ ஶீலா ||7**

ஷபர - மீன் (மத்ஸ்யாவதாரம்); கமட - ஆமை (கூர்மாவதாரம்); கோலா - பயங்கரமான (வராகாவதாரம்); ஷத்ரு - ஹிரண்யகசிபுவின் எதிரியே (நரசிம்ம அவதாரம்); காஷ்யபி ஸுபாலா - கஷ்யபரின் மனைவியான அதிதியின் மகன் (வாமனாவதாரம்); குபதி அனில வ்யாளா - அரசர்களான க்ஷத்ரியர் என்னும் காற்றிற்கு ஸர்ப்பத்தினைப் போன்றவர் (பரசுராம அவதாரம்); நீலகண்டாஸ்த்ரா காலா -

நீலகண்டரான ருத்ரரின் தனுஸ்ஸினை ஸீதையின் ஸ்வயம்வரத்தில் முறித்தவர் (ராமாவதாரம்); த்ருபத தனய சேலா - த்ருபதனின் மகளான திரௌபதிக்கு எல்லையில்லா ஆடைகளை வழங்கி அருளியவர் (கிருஷ்ணாவதாரம்); தூர வர்ஜித துகூலா - வஸ்திரத்தினை விட்டு திகம்பரர் ஆனவர்; வபு க்ஷிதிஸுர பாலா - பிராமணரின் மகனாக பிறந்து; ரக்தபத பேத ஷீலா - ரக்த பாத என்னும் யவன அசுரனை ஸம்ஹாரம் செய்யும் செயலில் ஈடுபடுபவர் (கல்கி அவதாரம்);

ஸ்ரீஹரியின் தஸாவதாரங்களின் சிறப்புகளைக் குறிப்பிட்டு இங்கு வணங்குகிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

மத்ஸ்ய, கூர்ம, பயங்கரமான வராக, ஹிரண்யகசிபுவின் எதிரியான நரசிம்ம, கஷ்யபரின் மனைவியான அதிதியின் மகனான வாமன, அரசர்களான க்ஷத்ரியர்களின் எதிரியான பரசுராம, நீலகண்டரான ருத்ரரின் தனுஸ்ஸினை சீதையின் ஸ்வயம்வரத்தில் முறித்த ராம, த்ருபதனின் மகளான திரௌபதிக்கு எல்லையில்லா ஆடைகளை வழங்கி அருளிய கிருஷ்ண, வஸ்திரத்தை விட்டு திகம்பர ஆன பௌத்த, பிராமணரின் மகனாகப் பிறந்து, ரக்தபாத என்னும் யவன அசுரனை சம்ஹாரம் செய்யும் கல்கி - ஆகிய அவதாரங்களை எடுத்த ஸ்ரீஹரிக்கு நமஸ்காரங்கள்.

**பத**
**க்ஷேத்ரக்ஞ க்ஷேத்ர நாமக க்ஷீராப்$^3$தி$^4$ நிஜாகா$^3$ரா |**
**நிர்மல ஓம்காரா |**
**மாத்ரு ப்ரதிபாத்$^3$ய ஸ்வரூபா | வர்ஜித பாபா |**
**கு$^3$ருவெனிப ஸாந்தீ$^4$பா |**

**புத்ரன தந்த$^3$ பராக்ரமா | எல்லர ஸ்வாமி |**
**பரம ப்ரியஜாமா |**
**ப$^4$க்த கொ$^3$லிது$^3$ விஸ்வ ரூபவா | தோரி சாபவா |**
**கொட்டு களத்$^3$யோ தாபவா || 7**

க்ஷேத்ரக்ஞ க்ஷேத்ர நாமக - க்ஷேத்ரக்ஞ, க்ஷேத்ர என்னும் பெயரைக் கொண்டவன்; க்ஷீராப்தி நிஜாகாரா - பாற்கடலையே

வீடாகக் கொண்டவர்; நிர்மல - தோஷ தூரன்; ஓம்காரா - பிரணவ ப்ரதிபாத்யன்; மாத்ரு ப்ரதிபாத்ய ஸ்வரூபா - மாத்ருகா (அனைத்து எழுத்துக்களாலும் ப்ரதிபாத்யன்); வர்ஜித பாப - பாவங்களை விலக்குபவன்; குருவெனிப ஸாந்தீப புத்ரன தந்த பராக்ரமா - தன் குருவான ஸாந்தீபனி முனிவரின் மகனை திரும்பக் கொண்டு வந்து அளித்த வீரனே; எல்லர ஸ்வாமி - அனைவரின் ஸ்வாமியே; பரம ப்ரியஜாமா - பிரம்மனால் விரும்பப்படுபவன்; பக்தகொலிது - பக்தனான அர்ஜுனனுக்கு மகிழ்ந்து; விஷ்வரூபவா தோரி - விஷ்வரூபத்தைக் காட்டி; சாபவா கொட்டு - தனுஸ்ஸினை மறுபடி பிடிக்குமாறு செய்து; களத்யோ தாபவா - அவனுடைய சந்தேகங்களை / மனதின் தாபங்களை போக்கினாயே;

ஸ்ரீஹரியின் பற்பல பெயர்களை சொல்லி புகழ்ந்தவாறு, ஸ்ரீகிருஷ்ண அவதாரத்தில் நடந்த சில சம்பவங்களையும் குறிப்பிட்டு பகவந்தனை போற்றுகிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

க்ஷேத்ரக்ஞ, க்ஷேத்ர என்னும் பெயர்களைக் கொண்டவனே; பாற்கடலையே வீடாகக் கொண்டவனே; தோஷ தூரனே; பிரணவ ப்ரதிபாத்யனே; மாத்ருகா ப்ரதிபாத்யனே; பாவங்களை விலக்குபவனே; தன் குருவான ஸாந்தீபனி முனிவரின் மகனை திரும்பக் கொண்டு வந்து அளித்த வீரனே; அனைவரின் ஸ்வாமியே; பிரம்மனால் விரும்பப்படுபவனே; பக்தனான அர்ஜுனனுக்கு மகிழ்ந்து, விஸ்வரூபத்தை காட்டி, மறுபடி அவனை வில்லினை பிடித்து போர் புரியச் செய்தவனே; அர்ஜுனனின் சந்தேகங்களை / மனதின் தாபங்களை போக்கியவனே;

**ஸ்லோக**

**அதி ஸுவிமல கா$^{3}$த்ரா | அகி$^{2}$ள லோகைக பாத்ரா |**
**வ்ருததிஜ த$^{3}$ள நேத்ரா | வ்ருத்ரஹாத்$^{3}$யமர மித்ரா |**
**ஶ்ருதி கமலஜ ஸூத்ரா | ஸ்துத்ய பாவன பவித்ராs |**
**ப்ரதிஹத ஸுசரித்ரா | பாது லக்ஷ்மீ களத்ரா ||8**

அதி ஸுவிமல காத்ரா - அற்புதமான ப்ரக்ருதி சம்பந்தமில்லாத அப்ராக்ருதமான சரீரம் கொண்டவனே; அகிள லோகைக பாத்ரா - அகில உலகத்திலும் ஸ்வதந்த்ர கர்த்ருத்வ உள்ள ஒரே ஒருவன்;

வ்ருத்திஜ தள நேத்ரா - சுழிகளைக் கொண்ட ஏரியில் பிறந்த தாமரையின் கண்களைக் கொண்டவன்; வ்ருத்ரஹாத்யமர மித்ரா - வ்ருத்ராஸூரனைக் கொன்றவன் / இந்திரனின் மற்றும் அனைத்து தேவதைகளின் மித்ரன்; ஷ்ருதி கமலஜ ஸூத்ரா ஸ்துத்ய - வேதங்களாலும், பிரம்மஸூத்ரங்களாலும் புகழப்படுபவன்; பாவன - பரிசுத்தமானவன்; பவித்ரா - பவித்ரமானவன்; அப்ரதிஹத ஸுசரித்ரா - அலைகளைப் போல தொடர்ந்து வரும் நல்ல சரிதத்தைக் கொண்டவன்; பாது லக்ஷ்மி களத்ரா - லட்சுமியின் தலைவனே, என்னை காப்பாயாக.

ஸ்ரீஹரியின் பல்வேறு மகிமைகளை சொல்லி, தன்னை காக்குமாறு வேண்டிக் கொள்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

அற்புதமான அப்ராக்ருத சரீரத்தைக் கொண்டவனே; அகில உலகத்திலும் ஸ்வதந்த்ர கர்த்ருத்வ உள்ள ஒரே ஒருவனே; தாமரைக் கண்ணனே; வ்ருத்ராஸூரனைக் கொன்றவனே; இந்திரனின் மற்றும் அனைத்து தேவதைகளின் மித்ரனே; வேதங்களாலும், பிரம்ம ஸூத்ரங்களாலும் புகழப்படுபவனே; பரிசுத்தமானவனே; பவித்ரமானவனே; அற்புத சரித்திரத்தைக் கொண்டவனே; லட்சுமியின் தலைவனே; என்னை காப்பாயாக.

பத

**ஏளு கோ[4]ளிய கெ[3]த்[3]த[3] யது[3]பதீ | ஸுபரஞ்யோதி |**
**நின்னய தி[3]வ்ய க்[2]யாதீ |**
**ஏளேளு ஜக[3]தொ[3]ளு நுதிஸோரு - நித்ய ஸுகி[2]ஸோரு |**
**ஆனந்தா[3]ப்தி[4]க[3]தரு |**

**கேளு மானவ நா ப[3]ல்லெனெ நின்னா நிருதாபன்னா |**
**ஜன க்லேஶ ப[4]ஞ்ஜனா |**
**தாளிதெ[3] நரரொளு நரவேஷா | மஞ்சுள பா[4]ஷா |**
**என்னய அபி[4]லாஷா ||8**

ஏளு கோளிய கெத்த - சிறந்ததான ஏழு எருதுகளை வென்றவன்; யதுபதி - யாதவ குலத்தில் உதித்தவன்; ஸுபரஞ்யோதி - அனைவருக்கும் உத்தமமான ஞானத்தை வழங்குபவன்; நின்னய

திவ்ய க்யாதி - உன்னுடைய அற்புதமான புகழினை; ஏளேளு ஜகதொளு நுதிஸோரு - அனைத்து உலகங்களிலும் அனைவரும் புகழ்வார்கள்; நித்ய ஸுகிஸோரு - மோட்சத்திற்கு செல்கிறார்கள்; ஆனந்தாப்திகதரு - ஸ்வரூபானந்த போகிகள்; கேளு மானவ நா பல்லெனெ - குறைந்த யோக்யதை உடைய நான் அவனது மகிமைகளைப் பற்றி முழுவதுமாக அறியேன்; நின்ன - உன்னுடைய; நிருதாபன்னா ஜன க்லேஷ பஞ்சனா - எப்போதும் பக்தர்களின் துக்கங்களை பரிகரிப்பவனே; தாளிதெ நரரொளு நரவேஷா - அதற்காக மக்களில் மக்களாக ராம, கிருஷ்ணாதி அவதாரங்களை செய்தவனே; மஞ்சுள பாஷா - வேதங்களே உன் பேச்சுக்களாகக் கொண்டவனே / மோட்சப் பிரதனே; என்னய அபிலாஷா - என்னுடைய விருப்பங்களை நிறைவேற்றுபவனே.

ஸ்ரீஹரியின் மகிமைகள் இங்கும் தொடர்கின்றன.

சிறந்ததான ஏழு எருதுகளை வென்றவனே; யாதவ குலத்தில் உதித்தவனே; அனைவருக்கும் உத்தமமான ஞானத்தை வழங்குபவனே; உன்னுடைய அற்புதமான புகழினை அனைத்து உலகங்களிலும் அனைவருமே புகழ்கிறார்கள். மிகக் குறைந்த யோக்யதை கொண்ட நான், உன்னுடைய மகிமைகளைப் பற்றி முழுவதுமாக அறியேன். எப்போதும் பக்தர்களின் துக்கங்களை பரிகரிப்பவனே; அதற்காக மக்களில் மக்களாக ராம, கிருஷ்ணாதி அவதாரங்களை செய்தவனே; வேதங்களே உன் பேச்சுக்களாகக் கொண்டவனே; என்னுடைய விருப்பங்களை நிறைவேற்றுபவனே.

**ஸ்லோக**

**ஹனுமனுத பாதா$^3$ப்$^3$ஜா - ஹம்ஸ ஸம்வக்த்ருகுப்$^3$ஜா |**
**தனுவிக்ருத வினாஶா | காளிஜிஹ்வாஸு தே$^3$ஶா ||**
**த$^3$னுஜ ததி கராளா | மத்தபௌண்ட்$^4$ராந்த கால |**
**ஹனும விது$^3$ர வந்த்$^3$ய | ஹைமக$^3$ர்ப்பா$^4$ண்ட$^3$ வந்த்$^3$யா ||9**

ஹனுமனுத பாதாப்ஜா - ஞானிகளால் வணங்கப்படுபவனே; ஹம்ஸ ஸம்வக்த்ரு - ஸ்வாச உஸ்வாச ரூபமாக ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்துக் கொண்டிருக்கும் பிராண தேவரின் முகத்தில் நிலைத்திருப்பவனே; குப்ஜா தனுவிக்ருத வினாஷா - குப்ஜையின்

தேகத்தில் இருந்த விக்ருதங்களை பரிகரித்தவனே; காளி = க + ஆளி = பிரம்மதேவர் மற்றும் பிரம்மதேவரை வணங்கும் பிராமணர்கள் அனைவரின்; ஜிஹ்வாஸு தேஷா - அவர்களின் நாக்கின் மேல் எப்போதும் நிலைத்திருப்பவனே; தனுஜ ததி கராளா - அசுர குலத்திற்கு பயங்கரமானவனே; மத்தபௌண்ட்ராந்த கால - பௌண்ட்ரக வாஸுதேவனை அழித்தவன்; ஹனும விதுர வந்த்ய - ஹனும, விதுரர்களால் வணங்கப்படுபவன்; ஹைமகர்ப்பாண்ட வந்த்யா - பிரம்மதேவர் மற்றும் பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து முமுக் ஷுகளால் வணங்கப்படுபவர்.

இந்த கடைசி ஸ்லோகத்தில் பகவந்தனின் மகிமைகளை தொடர்ந்து வர்ணிக்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

ஞானிகளால் வணங்கப்படுபவனே; ஸ்வாச உஸ்வாச ரூபமாக ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்துக் கொண்டிருக்கும் பிராண தேவரின் முகத்தில் நிலைத்திருப்பவனே; குப்ஜையின் தேகத்தில் இருந்த விக்ருதங்களை பரிகரித்தவனே; பிரம்மதேவர் மற்றும் பிரம்மதேவரை வணங்கும் பிராமணர்கள் அனைவரின் நாக்கின் மேல் எப்போதும் நிலைத்திருப்பவனே; அசுர குலத்திற்கு பயங்கரமானவனே; பௌண்ட்ரக வாஸுதேவனை அழித்தவனே; ஹனும, விதுரர்களால் வணங்கப்படுபவனே; பிரம்மதேவர் மற்றும் பிரம்மாண்டத்தில் இருக்கும் அனைத்து முமுக்ஷுகளால் வணங்கப்படுபவனே.

**பத**

**இட்டிகெ$^3$ பீட$^2$ ஸம்ஸ்தி$^2$த பாதா$^3$ | மங்க$^3$ள ப்ரதா$^3$ |**
**ஶாஶ்வத மோத$^3$ ஸுபதா$^3$ |**
**கொட்டு பாலிஸோ அனிமிஷ தரு | நின்னய சாரு |**
**மூருதியன்ன தோரோ |**

**புட்டலாரெனு ஜக$^3$தொ$^3$ளு தா$^3$தா | என்னய மாதா |**
**லாலிஸு ஜக$^3$ன்னாதா$^2$ |**
**விட்டல வ்ருந்தா$^3$ரகரரஸா | ஸந்தத லேஸா |**
**நின்னவரிகெ$^3$ ஸ்ரீஷா ||9**

இட்டிகெ பீட ஸம்ஸ்தித பாதா - செங்கலையே பீடமாக வைத்து நின்றிருப்பவனே; மங்கள ப்ரதா - மங்களங்களை கொடுப்பவனே; ஷாஷ்வத மோத ஸுபதா - நிரந்தரமான மகிழ்ச்சியை (முக்தியை); கொட்டு பாலிஸோ - கொடுத்து அருள்வாயாக; அனிமிஷ தரு - விரும்பியவற்றை கொடுப்பதில் கல்பவ்ருட்சம் போன்றவனே; நின்னய சாரு மூருதியன தோரோ - உன் அழகான வடிவத்தை (பிம்ப மூர்த்தியை) காட்டுவாயாக; புட்டலாரெனு ஜகதொளு - இந்த உலகில் நான் பிறக்க மாட்டேன்; தாதா என்னய மாதா - என் தந்தையே, தாயே; லாலிஸு ஜகன்னாத விட்டல - ஜகன்னாத விட்டலனே என்னை அருள்வாயாக; வ்ருந்தாரகர ரஸா - உன்னை வணங்குபவர்களுக்கு அருள்பவனே; ஸந்தத லேஸா - எப்போதும் மங்களங்களையே கொடுப்பவனே; நின்னவரிகெ ஸ்ரீஷா - உன் பக்தர்களுக்கு (அனைவருக்கும்) தலைவனே.

இந்த கடைசி பதத்தில், பாண்டுரங்கனின் மகிமைகளை சொல்லி, இந்த கிருதியை முடித்து வைக்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

செங்கல்லையே பீடமாக வைத்து நின்றிருப்பவனே; மங்களங்களை கொடுப்பவனே; நிரந்தரமான மகிழ்ச்சியை (முக்தியை) கொடுத்து அருள்வாயாக; விரும்பியவற்றை கொடுப்பதில் கல்பவ்ருட்சம் போன்றவனே; உன் அழகான வடிவத்தை (பிம்ப மூர்த்தியை) காட்டுவாயாக; இந்த உலகில் நான் மறுபடி பிறக்க மாட்டேன்; என் தந்தையே, தாயே; ஜகன்னாத விட்டலனே என்னை அருள்வாயாக; உன்னை வணங்குபவர்களுக்கு அருள்பவனே; எப்போதும் மங்களங்களையே கொடுப்பவனே; உன் பக்தர்களுக்கு (அனைவருக்கும்) தலைவனே -- என்னை காப்பாயாக.

இத்துடன் ஸ்ரீஜகன்னாத தாஸர் இயற்றிய கன்னட கிருதியான பாண்டுரங்க பாரிஜாதாவின் தமிழ் அர்த்த விளக்கங்கள் முடிவடைந்தன.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***